23rd September 1958]

### *Zonal Council*

* 451 *Q.*—SRI N. K. PALANISAMI AND SRI K. VINAYAKAM : Will the Hon. the Minister for Finance be pleased to state—

(*a*) whether a Zonal Council meeting was held during June 1958 at Ootacamund;

(*b*) the main subjects discussed;

(*c*) whether allowing of Godavari River water for Madras was discussed at the meeting;

(*d*) whether Parambikulam Scheme was discussed;

(*e*) whether forming of South Zone Reserve Police was discussed;

(*f*) whether implementation of land reforms in States was discussed; and

(*g*) if so, the details of the same on each item?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) Yes, Sir. The meeting was held on 1st June 1958.

(*b*) *to* (*f*) Questions connected with the Regional Power Grid for the Southern Zone, the working of the Southern Food Zone, the diversion of waters from the waterspread of Western Ghats to the east of the Ghats, the formation of a common police reserve force for the Southern Zone and the classification of power projects into 'core' and 'non-core' projects, etc., were generally discussed.

(*g*) As the discussions related to many inter-State problems of a delicate nature, it will not be in the public interest to disclose them. But, if any major decisions affecting this State are reached, the Government will keep the Legislature informed.

SRI N. K. PALANISAMI : பரம்பிக்குளம் திட்டம் சம்பந்தமாக இரு சர்க்கார்களும் கூடி, பிரச்சினையை உடனடியாகத் தீர்த்து, பரம்பிக் குளத் திட்டத்தை நடைமுறையிலே கொண்டுவர என்ன பேசப்பட்டது ?

THE HON. SRI C. SUBRAMANIAM : பரம்பிக்குளம் பற்றிய பேச்சு வார்த்தைகளில் எவ்வளவு சீக்கிரம் ஒப்பந்தம் ஏற்படவேண்டுமோ அவ்வளவு சீக்கிரம் எல்லா முயற்சிகளும் எடுக்கப்பட்டு வருகிறது.

SRI K. VINAYAKAM : Sir, since the Andhra State is one of the members of the Zonal Council, did not the Madras Government utilize that opportunity of investigating the question of getting water from the Godavari and the Krishna Rivers to the State of Madras?

THE HON. SRI C. SUBRAMANIAM : No investigation was done in the Zonal Council. But we wanted an investigation to be made with reference to the feasibility of the diversion of these waters.

SRI K. VINAYAKAM : Sir, what was the reaction of the Andhra State when the question was mooted by our State in this matter?

THE HON. SRI C. SUBRAMANIAM : I think, Sir, the reaction was favourable.

SRI N. MAHALINGAM : 1955-ம் வருடம், டிசம்பர் மாதத்தில் கள்ளிக்கோட்டையில் நடந்த கம்யூனிஸ்ட் கட்சிக் கூட்டத்தில் பரம்பிக்குளத் தண்ணீர் சென்னைக்குக் கொடுக்கக்கூடாதென்று தீர்மானம் நிறைவேற்றியது சர்க்காருக்குத் தெரியுமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இதையெல்லாம் கட்சிப் பிரச்சினையாக்கக்கூடாது என்று முதல் அமைச்சரவர்கள் மிகவும் வற்புறுத்திக் கேட்டுக்கொண்டிருக்கிறார்கள். ஆகவே, இதைக் கட்சிப் பிரச்சினை யாக்காமல், இரண்டு ராஜ்யங்களின் மக்களுக்கும் நன்மை பயக்கக் கூடிய அளவிலே ஒப்பந்தம் செய்துகொள்ள எல்லா முயற்சிகளும் எடுக்கப்பட்டு வருகின்றன. இதைக் கட்சிப் பிரச்சினையாக்க வேண்டாம் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

SRI K. ANBAZHAGAN : வட்டாரக் குழு ஆலோசனைக் கூட்டத்தில், உணவு பிரச்சினையின் முக்கியத்துவத்தை உணர்ந்து, மற்ற திட்டங்களைவிட தண்ணீர்த் திட்டம் நிறைவேற்றுதற்கு வழிவகைகள் செய்ய அதன் மண்டல மூன்று மாநிலங்களிடையேயும் ஏதேனும் திட்டம் உருவாக்கப்பட்டதா, அதன் முடிவு என்ன ?

THE HON. SRI C. SUBRAMANIAM : அதைப் பற்றித்தான் இப்பொழுது சொன்னேன். மேற்குத் தொடர்ச்சி மலைத் தண்ணீரை எந்த அளவுக்கு கிழக்கே திருப்ப முடியும், ஆந்திராவில் இருக்கக்கூடிய உபரித் தண்ணீரை எந்த அளவுக்கு நம் ராஜ்யத்துக்கு உபயோகப்படுத்த முடியும் என்பதெல்லாம் பரிசீலனை செய்யவேண்டும் என்று முடிவு செய்யப்பட்டிருக்கிறது.

SRI A. R. SUBBIAH MUDALIAR : மேற்கேபாயும் பம்பையார் பெரியாறு தண்ணீரை, திருப்ப யோசனை செய்யப்பட்டதா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : யோசிக்கப்பட்டது, பரிசீலனை செய்யவேண்டு மென்று முடிவு செய்யப்பட்டது.

SRI K. VINAYAKAM : Was any consensus of opinion there between the States concerned to have uniform legislation regarding the question of land reforms in the southern zone?

THE HON. SRI C. SUBRAMANIAM : I do not think, Sir, a uniform policy can be adopted with reference to all the States. Conditions may differ from State to State. Therefore, the States will have to come to final decisions regarding land reforms with reference to the conditions obtaining in the States concerned.

SRI A. GOVINDASAMY : இந்த பரம்பிக்குளத் திட்டத்தை நிறைவேற்றுவதில், கேரள மேலிடத்தில் என்னென்ன உடன்பாடு ஏற்பட்டிருக்கிறது ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இப்பொழுது அது பேச்சு வார்த்தையில் இருக்கும் சமாசாரம். அதை விவாதிக்கக் கூடாது.

SRI T. VELUCHAMI : பம்பையார் சம்மந்தமாக கேரளா சம்மதம் தெரிவித்திருக்கிறார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : அதைப் பரிசீலனை செய்வதாக ஒப்புக்கொண்டிருக்கிறார்கள்.